

# கிருஷ்ண லீலா

கிருஷ்ணமூர்த்தி என் இளவயதின் ஒரு கால கட்டத்தை மிகவும் ஆக்கிரமித்தான். அவனும் நானும் ஐந்தாம் வகுப்பிலிருந்து பள்ளி இறுதிவரை ஒரே பள்ளியில் படித்தோம். ஒரே தெருவில் இருந்தோம். சில வருஷங்களில் ஒரு செக்ஷனில்கூட இருந்தோம். ஆறாம் வகுப்பில் என் அருகில் உட்கார்ந்திருந்தபோது என்னை ஒரு சிறிய 'ஸேஃப்டி பின்'னால் இடது தொடையில் அவன் குத்தினது இன்னும் வலிக்கிறது. நான் வீறிட்டு ஏ. ஆர். சாரிடம் நியாயம் கேட்டேன். ஏ. ஆர். விஷயத்தின் தீவிரத்தை உணர்ந்து, இது பெரிய கேஸ்; ரத்தம் வந்த கேஸ்; ஹெட்மாஸ்டரே தீர்ப்பளிக்கட்டும்' என்று என்னையும் அவனையும் மானிட்டருடன் ஹெட்மாஸ்டர் அறைக்கு அனுப்பிவிட்டார்.

அங்கே செல்கையில் பாதிவழியில் கிருஷ்ணமூர்த்தியும் என்னுடன் சேர்ந்து விசும்ப ஆரம்பித்துவிட்டான். அதனாலும் ஹெட்மாஸ்டருக்குக் காது மந்தமாக இருந்ததாலும், கேஸை விவரிக்க வந்த மானிட்டரின் திறமைக் குறைவாலும் ஹெட்மாஸ்டர் நான்தான் கிருஷ்ணமூர்த்தியை ஊசியால் குத்தினேன் என்று நினைத்துக் கொண்டு என்னைச் செவிட்டில் அறைந்து, என் தாத்தா டெபுடி கலெக்டராக இருந்ததைச் சொல்லி, அவர் பெயருக்கு நான் இழுக்குக் கொண்டுவருவதாக என்னைத் திட்டி நெருப்பாக முறைத்தார். மானிட்டர் மடையன் விஷயத்தைச் சரியாக அவருக்கு விவரித்து, அது அவருக்குப் புரிந்து ... அதற்குள் அதன் தீவிரம் ஆறிப்போய் விட்டது. கிருஷ்ணமூர்த்திக்கு லேசாகத் தலையில் ஒரு குட்டு மட்டுந்தான் கிடைத்தது. இந்தத் தண்டனையின் அநியாயம் என் மனத்தில் இன்னும் முப்பது வருஷங்களாகியும் தேங்கி இருக்கிறது. எப்போதாவது அதை நினைக்கையில் ஒரு விசும்பல் வருகிறது.

கிருஷ்ணமூர்த்தி குள்ளமானவன். குள்ளமானவர்கள் பலரிடம் சற்று வித்தியாசமான விஷயம் ஏதாவது ஒன்று இருப்பதை நான் நிறையப் பார்த்திருக்கிறேன். சர்வாதிகாரிகள் பெரும்பாலும் குள்ளமாக இருந்திருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். கிருஷ்ணமூர்த்தியுடன் நான் சண்டை போட்டிருந்தால் நான் ஜெயித்திருப்பேன். எவ்வளவோ தடவை அவனுடன் போராட எனக்கு ஆத்திரம் ஏற்பட்டது. ஆனால் போராட எனக்கு மனசில் தைரியம் ஏற்படவில்லை. இதற்குக் காரணம் நான் உயரமாக வளர்ந்திருந்தாலும் என் உள்ளே இருந்த கோழைத்தனமும், சுலபமாக அடிமைப்படுவதில் இருந்த சந்தோஷமும், ஒருவிதமான மந்தத்தனமுமேதான் என்று பிற்காலத்தில் நான் புத்தகங்கள் படித்தவுடன் காரணம் சொல்லிக் கொள்கிறேன்.

கிருஷ்ணமூர்த்தி இயல்பான தலைவன், இயல்பான சர்வாதிகாரி. எங்கள் தெருக் கிரிக்கெட் கோஷ்டிக்கு அவன்தான் காப்டன். எனக்கு 'பௌலிங்' கொடுக்கமாட்டான். ஒன்பதாவதாகப் 'பாட்' செய்யச் சொல்வான். தான் அவுட் ஆனதும் 'டிக்ளேர்' செய்து விடுவான். பந்து சாக்கடையில் விழுந்தால் நான்தான் எடுத்து அலம்பிக் கொண்டுவர வேண்டும். சீதா பாட்டியின் வீட்டுக்குள் பந்து சென்றுவிட்டால் நான்தான் போய் முழங்காலில் மண்டியிட்டுக் கெஞ்சி அதை மீட்டுக் கொண்டுவர வேண்டும். தெருவில் எப்போது கிரிக்கெட் சீஸன் முடிந்து பம்பர சீஸன் ஆரம்பம் என்பதைக் கிருஷ்ணமூர்த்தியே தீர்மானிப்பான்.

பம்பரத்தில் தலையாரி என்று ஓர் ஆட்டம் உண்டு. கொடுமை! புதிதாக ரங்கவிலாசத்தில் ஓர் அணா கொடுத்து வாங்கிய என் பம்பரத்தின் புதிய வர்ணத்தைச் சேதப்படுத்திச் சொறி நாய்போல ஆணிக் குத்துகள் ஏற்படுத்தும் ஆட்டம். அவர்களுக்கு எல்லாம் கோஸ் எடுக்கச் சுலபமாக வரும். எனக்கு மட்டை அடிக்கும்.

அவர்களுடன் நான் சுலபமாக விளையாடாமல் இருந்திருக்க முடியும். ஆட்டத்துக்கு வரவில்லை என்றால் என்னைப் பெண்பிள்ளை என்று சொல்வார்கள். பெண்பிள்ளை என்கிற பட்டம் எனக்கு உலகிலேயே அவமானம் மிகுந்ததாக அப்போது தோன்றியது.

அப்புறம் 'குச்சி ப்ளே' என்று மற்றொரு கொடுமையான விளையாட்டு. அந்த ஆட்டம் ஆரம்பிக்கப் போகிறார்கள் என்றாலே எனக்கு வயிற்றில் புளியைக் கரைக்கும். ஒருவிதமான விநோதமான 'ஒண்ணர டூவர டக்கர டன்' என்கிற கணக்கில் நான்தான் பெரும் பாலும் முதல் பலியாக மாட்டிக்கொள்வேன். குச்சி ப்ளே என்பது ஒருவிதமான ஹாக்கிபோல, ஆளுக்கொரு சுள்ளிக் குச்சி வைத்துக் கொள்வோம். முதலில் மாட்டிக்கொண்டவன் (நான்) இரண்டு கைகளையும் தூக்கிக்கொண்டு விரல் இடுக்கில் குச்சியை இறுக்கிப் பிடிக்காமல் தளர்ச்சியாக வைத்துக்கொள்ள வேண்டும். அதை முதலில் ஒருவன் தன் குச்சியால் பறக்க வைப்பான். மற்றவர்கள் தம் தம் குச்சிகளால் அதைத் தள்ளிக்கொண்டே செல்லுவார்கள். அவர்களைப் பிடிக்க வேண்டும். என் குச்சியையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். பிடிப்பது என்பது கல்லில் குச்சி படுவதற்குமுன் அவர்களைத் தொடுவது. எவனையாவது ஒருவனை மட்டும் துரத்தினா லும் நம் குச்சி மற்றவர்களால் தள்ளப்பட்டுத் தூர தேசம் போய்விடும். அவனைத் தொடுவதற்குள் அவன் கல்லுக்குச் சென்று தப்பிவிடுவான். இந்த ஆட்டத்தின் விதிகளை யார் நிர்ணயித்தார்கள் என்று தெரிய வில்லை. மிகவும் பாரபட்சமானது. கிருஷ்ணமூர்த்தியை ஒரு தடவை ஸ்பஷ்டமாகக் கல்லில் இல்லாதபோது தொட்டேன். அவன் தான் 'அவுட்' இல்லை என்று சாதித்தான். அந்த வாக்குவாதத்தில் என் குச்சி தெற்கு வாசல் போய்விட்டது. அங்கிருந்து ஒரு மைல் நொண்டி அடித்து ஆரம்பத்துக்கு வரவேண்டியிருந்தது, 'நொண்டி நொண்டி நொடிச்சுக்கோ! வெல்லம் தரேன் கடிச்சுக்கோ!' என்கிற பின்னணியுடன்.

கிருஷ்ணமூர்த்தியிடம் ஒருவிதக் கவர்ச்சி இருந்தது. சில வேளை என்னை அணைத்துக்கொண்டு தனியாக அழைத்துச் சென்று பேசுவான். அதேசமயம் 'அட்டாக்' கொடுத்துத் தள்ளியும் விடுவான். அவனிடம் எதிர்பாராத தன்மை ஒன்று இருந்தது. அவனுக்குத் தமிழில் பல கெட்ட வார்த்தைகள் அர்த்தத்துடன் தெரிந்திருந்தன.

அவன் ஒரு தடவை சிகரெட் குடித்துப் பார்த்து அந்த அநுபவத்தை விவரமாகச் சொன்னான். பெண்கள் என்கிற விஷயமே அப்போது எங்களுக்கு அசுத்தமானதாகவும் ஆரோக்கியக் குறைவானதாகவும் இருந்தது. அந்த இரண்டுகெட்டான் வாழ்க்கையில் பெண்களுக்கு இடமே இல்லாமல் இருந்தது. அவர்கள் விளையாட்டுக்களும் விழாக்களும் தனியாக இருந்தன. கிருஷ்ணமூர்த்தி இந்த எல்லையை மீறிப் பலதடவை பெண்கள் பற்றிய விஷயங்களை எல்லாம் பேசுவான். ஆதாரமாக உடல்கூறு சாஸ்திரத்தில் இந்த இரண்டு ஜாதிகளுக்கும்

இருந்த முக்கிய வித்தியாசங்களைப் பற்றி மசாலா சேர்த்துச் சொல்வான். எங்கள் கன்னத்தில் ரத்தம் பாயும். கார்டு மாமாவின் மூத்த பெண்ணைக் கிருஷ்ணமூர்த்தி ஒரு தடவை பின்தொடர்ந்ததை யும் அவள் வடக்குவீதித் திருப்பத்தில் கறுப்பாக ஓர் ஆளிடம் கடுதாசி கொடுத்ததைக் குப்பைத் தொட்டிக்குப் பின்னால் பதுங்கிக் கவனித்ததையும் அவன் வால்டர் ஸ்காட் நாவல்கள்போல் விவரிப்பான். திருச்சியில் ஒரு பார்பர் ஷாப்பில் இருக்கும் சீன அழகிகளின் போட்டோவைப் பற்றியும், ஹரிதாஸ் படத்தில் அவன் மட்டும் பார்த்த ஒரு வெட்டப்பட்ட காட்சியையும் விவரிப்பான். எங்கள் எல்லாரையும் கூட்டி வைத்துச் சவுக்கார் வீட்டுத் திண்ணை யில் அவன் சொன்ன தொடர்கதைகளில் பாலங்கள் இடிந்தன. சின்னப் பையன்கள் தொங்கினார்கள். கீழே வெள்ளத்தில் முதலைகள் தெரிந்தன.

அப்புறம் திடீரென்று தெருவின் சுவர்களில் எல்லாம் கரிக்கோட்டில் 'எஸ். கே. ஓ.' என்கிற எழுத்துக்கள் தோன்றும். இந்த மாதிரி மர்ம எழுத்துக்களின் உள் அர்த்தமும் விபரீத வியாக்கியானங்களும் அவனுக்குத் தெரிந்திருக்கும், சொல்லமாட்டான். எட்டணா கொடுத் தால் சொல்லுவேன் என்பான். எட்டணா அப்போது எட்டாத அணா.

எப்போதும் அவனைப் பின்பற்றி நாங்கள் சென்றுகொண்டிருப் போம். அவன் தலைமையை நாங்கள் எப்போதாவது மறுத்ததாக ஞாபகமே இல்லை. வேறு ஒருவரும் அந்தப் பதவியை விரும்பவும் இல்லை. அவன் அமைத்த 'சீரங்கம் சிறுவர் சங்கம்' (எஸ். எஸ். எஸ்.) ஒரு கையெழுத்துப் பத்திரிகை நடத்தியது. கிருஷ்ணமூர்த்தி தமிழில் நிறைய மார்க் வாங்குவான். கிருஷ்ணமூர்த்திதான் ஆசிரியர். அதற்குப் பெயர் 'கீழ்த்தென்றல்.' ஜனார்த்தனனின் கையெழுத்து நன்றாக இருக்கும். அவனே மாய்ந்து மாய்ந்து எழுதுவான். சிவசாமி 'முயல்' என்கிற பெயரில் படங்கள் வரைவான். ஒரு தடவை அவன் பத்திரிகைப் படங்களின் கீழ்க் கார்பன் வைத்து வரைவதை நான் பார்த்துவிட்டேன். கிருஷ்ணமூர்த்தி, 'கீழ்த்தென்ற'லில் 'ஆவி' என்று ஒரு கதை எழுதினான். லா. ச. ராமாமிர்தத்தின் வரிகளை அப்படியே உபயோகித்திருந்தான். இதை நான் கண்டுபிடித்ததை மற்றவர்களிடம் சொல்லியிருந்தால் என்னை ஜாதிப் பிரஷ்டம் செய்திருப்பான்.

எஸ். எஸ். எஸ்ஸில் எங்களுக்கு எல்லாம் சைக்கிள் கற்றுத் தர ஓர் ஏற்பாடு இருந்தது, அதன்படி ஆளுக்குக் காலணா கொண்டு வந்து வாடகை சைக்கிள் ஒரு மணி நேரத்துக்கு எடுப்போம். ஒரு மணி நேரத்தில் எட்டு பேர் கற்றுக்கொள்ள வேண்டும். சைக்கிள் கற்றுக்கொள்வதை விட சைக்கிளுடன் இரைக்க இரைக்க ஓடுவதுதான் அதிகம் இருந்தது. கிருஷ்ணமூர்த்தியே தடவைக்குத் தடவை ஓட்டிக் காட்டுவான். எனக்கும் சந்தர்ப்பம் வந்து எனக்கும் 'பாலன்ஸ்' வந்தபோது கிருஷ்ணமூர்த்தியே என்னை சைக்கிளுடன் "நேராகத்

தேர் முட்டியைப் பார்த்துக்கொண்டே ஓட்டு" என்று அம்போ என்று விட்டுவிடுவான். ஒருவிதமான விறைப்புடன், ஒரு பதினைந்து டிகிரி சாய்வில் சைக்கிள் என்னை ஓட்டிக் கொண்டிருந்தது. தூரத்தில் ஒரு தயிர்க்காரி பலவிதச் சட்டிகளுடன் நடுத்தெருவில் நடந்து வந்துகொண்டிருந்தாள். சைக்கிள் தன் வாழ்க்கையின் ஆதர்சமே அந்தத் தயிர்க்காரியை இடிப்பது என்கிற ரீதியில் அவளையே நோக்கி ஓடியது. அதை எந்த வகையிலும் திருப்பவோ அதிலிருந்து இறங்கிக்கொள்ளவோ சாத்தியமில்லாத நிலையில் அவள் மேல் மோதிப் பானைகள் உருண்டபோது எஸ்.எஸ்.எஸ். அங்கத்தினார்கள் எல்லாரும் காணாமற் போய்விட்டார்கள். தயிர்க்காரி என் ஜாதியைக் குற்றம்சொல்லி என்னைத் திட்டி என்னைத் துரத்த, நான் மாடி ஏறிக்குதித்து நன்றாக இருட்டுகிற வரையிலும் மறைந்திருந்தேன்.

கிருஷ்ணமூர்த்தியின் தலைமைக்குச் சவாலாக ஒரே ஒருவன்தான் வந்தான். வீரராகவன். புதிதாக வந்திருந்த ஓவர்சியர் பையன். முதலில் கிருஷ்ணமூர்த்தியும் வீரராகவனும் மிகவும் குலாவினார்கள். ஆனால் மிகச் சில தினங்களில் வீரராகவன் எங்களிடமிருந்து சற்று வேறுபட்டவன் என்பது தெரிந்துவிட்டது. வீரராகவன் பட்டணத்திலிருந்து வந்தவன். அங்கெல்லாம் கிரிக்கெட், பம்பரம் எல்லாம் வேறுவிதமாக ஆடுவார்கள் என்று அந்த விதிகளைக் கொண்டுவர முயன்றான். மேலும், 'கிருஷ்ணமூர்த்தியே ஏன் முதலில் ஆட வேண்டும்?' என்பதுபோன்ற ஆதாரமான கேள்விகளை எல்லாம் கேட்க ஆரம்பித்தான். சீக்கிரமே கிருஷ்ணமூர்த்திக்கும் அவனுக்கும் ஆக்ரோஷமான சண்டை வந்து அவர்கள் புழுதியில் புரண்டார்கள்.

பெரியவர்கள் வந்து விலக்கிவிட்டார்களே என்று எனக்கு வருத்தமாக இருந்தது. வீரராகவன் பிரிந்துபோய்விட்டான். வேறு கட்சி தொடங்கி வேறு இடத்தில் அவன் விளையாட ஆரம்பித்துவிட்டான்.

எங்கள் கட்சியிலிருந்து சிலர் விலகி வீரராகவனுடன் சேர்ந்துகொண்டார்கள். நான் சேரவில்லை. எனக்குத் தைரியம் இல்லை. கிருஷ்ணர்த்தி தன் தலைமைக்கு வந்த முதல் எதிர்ப்பில் ஒருவாரம் நிஜமாகவே அயர்ந்துவிட்டான். பிற்பாடு சமாளித்துக்கொண்டான். வீரராகவன் கட்சியில் வேறு வீதிப் பையன்கள் எல்லாம் ஆடினார்கள். அவர்களில் எல்லாருக்கும் சமமாக 'பௌலிங்' கிடைத்தது; சமமாக 'பாட்டிங்' கிடைத்தது. அந்தக் கட்சியின் புதுமையும் ஆர்வமும் என்னை எத்தனையோ தடவை சபலப்படுத்தின. இருப்பினும் எனக்குக் கிருஷ்ணமூர்த்தியை எதிர்க்கும் தைரியம் வரவில்லை. கிருஷ்ணமூர்த்தி புதிதாக ஒரு தொடர்கதை சொல்ல வேறு ஆரம்பித்தான். இருப்பினும் புதிய கட்சியின் கவர்ச்சி வரவரச் சமாளிக்க முடியாததாக இருந்தது.

ஒரு தடவை சடுகுடு விளையாட்டில் கிருஷ்ணமூர்த்தி என் வேட்டியை உருவிவிட்டான். அவமானத்தில் அன்று இரவு தீர்மானித்து விட்டேன்; நான் கட்சி மாறி விட்டேன். வீரராகவன் கட்சியில்

எனக்கு வரவேற்பு இருந்தது. எல்லாரும் சமமாக இருந்தார்கள். கிருஷ்ணமூர்த்தி என்னைத் தனியாக வா என்றான், நான் தனியாகச் செல்ல விரும்பவில்லை. எதிர் வீட்டில் உட்கார்ந்துகொண்டு என் இரகசியங்களை எல்லாம் 'கீழ்த் தென்ற'லில் அம்பலப்படுத்தப் போவதாகச் சொன்னான். எனக்கு என்ன இரகசியங்கள் இருக்கின்றன என்று தெரியவில்லை. என்றாலும் எனக்கு உள்ளே பயமாக இருந்தது. வீரராகவன் தைரியம் சொன்னான். 'கீழ்த்தென்ற'லின் அடுத்த இதழுக்காக நான் மிகவும் காத்திருந்தேன்.

கிருஷ்ணமூர்த்தி என்மேல் ஒருவித மனோதத்துவப் போர்தான் நடத்தினான். தான் கொடுத்த கோலிக்குண்டுகளைத் திரும்பக் கேட்டான், நூறு கோலிகளுக்கு எங்கே போவேன்? மூன்று நாள் கெடு கொடுத்திருந்தான். தீப்பெட்டியின் லேபில்கள் எல்லாவற்றையும் திரும்பக் கேட்டான்.

ஜகதலப்ரதாபன் என்கிற படத்தின் அஞ்சு கச்சேரி என்கிற பிலிம் ஒன்று கொடுத்திருந்தான்; அதையும் கேட்டான். நான் அவனுக்கு எத்தனையோ கொடுத்திருக்கிறேன். அவற்றை ஞாபகப் படுத்தித் திரும்பக் கேட்க எனக்குச் சாமர்த்தியம் போதவில்லை.

பள்ளியில் என் டிபன் பாக்ஸ் காணாமற்போயிற்று. நான் தொட்டித் தண்ணீரில் நீர் குடித்துக்கொண்டிருந்த போது யாரோ முழுதும் என் தலையைப் பின்னாலிருந்து தண்ணீரில் அழுத்திவிட்டுத் திரும்பப் பார்ப்பதற்குள் ஓடிப்போய்விட்டார்கள். சுவர்களில் என் இன்ஷியலை வைத்துக் கரியில் கிறுக்கல்கள் தெருவெங்கும் தோன்றின. இதற்கெல்லாம் மகுடமாகக் 'கீழ்த்தென்ற'லில் 'புல்லுருவிகள்' என்கிற தலைப்பில், கிருஷ்ணமூர்த்தி நான் எஸ். வி. ஆர். வீட்டில் புடவை தோய்த்ததாகவும், என் வீட்டுப் பாத்திரங்களை மளிகைக் கடையில் விற்பதாகவும், இன்னும் பல விஷயங்கள் அடுத்த இதழில் வெளிவரும் என்றும் ஒரு கட்டுரை எழுதியிருந்தான்.

இது முழுவதும் பொய். நான் வீரராகவனிடம் மற்றொரு பத்திரிகை ஆரம்பித்து அதில் கிருஷ்ணமூர்த்தி லா. ச. ரா.வைக் காப்பி அடித்ததை எழுதச்சொன்னேன். வீரராகவன் அதெல்லாம் தேவை இல்லை என்று சொல்லிவிட்டான். கிருஷ்ணமூர்த்தி தான் கொடுத்த கோலிக் குண்டுகள், தீப்பெட்டி லேபில்கள் முதலியவற்றைச் சாயங்காலத்துக் குள் கொடுக்கவில்லை என்றால் ஊரிலிருந்து வரப்போகும் என் அப்பாவிடம் சொல்லப் போவதாக ஜனார்த்தனம் மூலம் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தான்.

என் வாழ்வில் நான் செய்த மிகக் கோழைத்தனமான காரியம் அதுதான். கிருஷ்ணமூர்த்தியின் பலமுனை தாக்குதலைத் தாங்காமல் அவன் கட்சிக்கு மறுபடி வந்துவிட்டேன். அதை இப்போது நினைத்தா லும் எனக்கு வெட்கம் ஏற்படுகிறது.

கிருஷ்ணமூர்த்தி என்னை ஏற்றுக்கொண்டான். ஆனால் நூறு தடவை "நான் இனிமே வீரராகவன் கட்சியில் சேர மாட்டேன்"

என்று எழுதித் தரச் சொன்னான். அப்புறம் அபராதம் எட்டணா விதித்தான். மாதம் இரண்டணா.

மறுபடி கட்சி மாறிய பின் வீரராகவன் என்னைப் பார்த்த பார்வையை என்னால் மறக்க முடியாது. 'நீயும் ஒரு மனிதனா?' என்பது போன்ற பார்வை. 'உன்னிடமிருந்து எவ்வளவோ எதிர்பார்த்தேன். ஏமாற்றிவிட்டாயே!' என்கிற பார்வை.

வீரராகவன் அன்றிருந்து எங்கள் காலேஜ் படிப்பு முடிந்து, அவன் தகப்பனார் ஊர்விட்டு மாற்றலாகி வேறு ஊர் போகிற வரையிலும் என்னுடன் பேசவே இல்லை.

என் பிந்திய வாழ்க்கையில் இதை எல்லாம் பற்றி நினைக்கிற போது அந்தக் கோழைத்தனத்தைப் பல தடவை வியந்திருக்கிறேன். இதற்கெல்லாம் ஃப்ராய்ட் ஒருவிதக் காரணம் வைத்திருப்பார் என்று நினைக்கிறேன்.

கிருஷ்ணமூர்த்தி அவ்வளவு தூரம் என்னை மிதியடி மிதித்தாலும் மறுபடி மறுபடி அவனையே சார்ந்திருக்கிறேனே! ஏன் என்று காரணம் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருக்கிறது. காரணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்றும் தோன்றுகிறது. வீரராகவனை டில்லியில் ஒரு தடவை பார்த்தேன். அங்கே டெபுடி செகரட்டரியாக இருக்கிறான். நாங்கள் இருவரும் ஸ்ரீரங்கத்தில் 'எனிமி' விட்டுக்கொண்ட பின் அப்போதுதான் பேசினோம். வருஷக் கணக்கில் பேசாமல் இருந்ததன் அர்த்தமற்ற தன்மையைப் பற்றி இரவு பூரா சிரித்துக்கொண்டிருந்தோம்.

எனக்கு என்னவோ அது அர்த்தமற்றதாகத் தெரியவில்லை. வயது வந்த பின்னும் அதே விளையாட்டுகளையே வேறு விதங்களில் விளையாடிக்கொண்டிருப்பதாகத்தான் படுகிறது.

வாழ்க்கையே ஒருவிதத்தில் ஓர் அபாரமான கிண்டல் போலத்தான் இருக்கிறது. அதற்கு எதுவும் நியாயமான விதிகள் இருப்பதாகத் தெரியவில்லை. அவ்வளவு கோழைத்தனமாக இருந்த என்னை எங்கேயோ உயர்த்திச் சுகமாக உட்கார வைத்திருக்கிறது. ஆனால் கிருஷ்ணமூர்த்தி . . .?

இன்று வாசலில் என்னிடம் வேலைக்குச் சிபாரிசுக் கடிதத்துடன் காத்திருக்கிறான். கொடுக்கலாமா வேண்டாமா – சொல்லுங்கள்.

1983